உ

கணபதி துணை.

நாட்டுக்கோட்டைநகரத்தாரென்னும்
மகுடதனவைசியரின்

# மரபுவிளக்கம்.

இஃது,
ஸ்ரீவன்றொண்டரவர்கள்
மாணாக்கரிலொருவராகிய
காரைக்குடி
ராம. சொ. சொக்கலிங்கச்செட்டியார்
அவர்களாற்செய்யப்பெற்று

காரைக்குடி
மு. ராம. பெரியணன்செட்டியாரவர்களால்
காரைக்குடி வைசியமித்திரன் பிராஞ்சு பிரஸில்
அச்சிடப்பெற்றது.
25-4-1919

உ

சிவமயம்.

ஓம் கணபதயேநம:

மேகசுந்தராபுராநவரதநிவாச

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுராப்யாந்நம:

## நாட்டுக்கோட்டைநகரத்தாரென்னும் மகுடதனவைசியரின்

# மரபுவிளக்கம்.

---

திருவளருந் தனவணிகர் கலியுகவாரம்பமுதற் றிகழ்ந்தெந் நாளுந், தெருள்வளருஞ் சைவசித்தாந் திகளாயே பரம்பரையாச் சிறந்துவாழும், பொருள்வளரும் காரைநகர த்தார்கள் புரிகோயில் பொற்ப மேவும் அருள்வளர்மீ னம்பிகைபா தாம்புயநா டொறுமிறைஞ் சியடுத்து வாழ்வாம்.

பூமலிசீர்ச் சாந்தியா புரிகாஞ்சி காவிரிப்பூம் பட்டினத்தின், மாமலிய வசித்துவந்த மருடதன வைசியரேழ் வகையாரென்றுந், தேமலிவண் சைவசித்தாந்

திகழ்காரை நகரிடைச்செய் செம்பொற் கோயிற், றாமலியு மீனாக்ஷி சுந்தரே சுரர்துணைத்தா டொழுது வாழ்வாம்.

இம்மகுடதனவைசியர்கள், கலியுகாரம்பந்தொடுத்து அன்றும்இன்றும் என்றுஞ்சைவகுலபரம்பரை விசேடகனதனவான்களாய், விபூதிருத்திராக்ஷ பஞ்சாக்ஷரசிவசாதனங்களை மேற்கொண்டு, இளையாற்றக்குடிமுதலியஒன்பதுசிவாலயபாத்தியஸ்தர்களாய், நித்தியநைமித்திகாதிபூசைகள் சிவாகமவிதிப்படிநடத்திவருகின்றசைவசித்தாந்திகளே. இவர்கள், எச்செயலானாலும் விபூதிதாரணமின்றிச்செய்யின் அதுநிஷ்பலமேயென்னுஞ் சுருதியுண்மைமேற்கொண்டவர்களாய்ச் சுபாசுபகாரியங்களெவற்றினும் எப்போதும் விபூதிதாரணமேயின்றியமையாதமுக்கியப்பொருளாக்கொண்டு நடத்துகின்றஅதிப்பிரியசீலர்களாய்வாழுகின்றார்கள்.

இவர்கள், ஆதியில் நாகநாட்டிலே சாந்தியாபுரியிலே யிருந்தசந்திரகுலவைசியர்கள். இவர்கள், சதாசிவகுருமூர்த்தியிடத்தில் பஞ்சாக்ஷரஉபதேசம்பெற்றுக் கோபதீசுரதெரிசனமும் மரகதவிநாயகர்பூசையும் ரத்தினவியாபாரமுஞ் செய்துகொண்டு பாக்கியசாலிகளாய் மன்னிணைமரியாதையுடன்வேதாத்தியய

ண சிவாகமபுராண சித்தாந்த வியுற்பந்நசீலர்களாயிருந்
து கலியுகாதி ௨௱௪ம் ௵ காஞ்சிபுரம்வந்து அரசனுப
சரிக்கப்பெற்றுச் சிவாலயமடாலயபாத்தியமும் அரு
ணகிரிசிவாசாரியரிடத்துப் பஞ்சாக்ஷரஉபதேசமும்
பெற்றுச் சத்திபுரீசுரதெரிசனமும் மரகதவிநாயகபூ
சையும் ரத்தினவியாபாரமுஞ் செய்துகொண்டு குரு
லிங்கசங்கமபத்தி கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த
வர்களாயிருந்தார்கள்.

பின்புகலியுக௵ ௨௲௩௱டு௨ல் விரோதிகிருது௵த்
தில் சோழதேசம்வந்து மனுநீதிச்சோழராஜாவினால்
அவ்வம்சத்தவர்க்குமகுடஞ்சூட்டுமரியாதை கொடுக்
கப்பெற்று அவன் கருத்தின்படி காவிரிப்பூம்பட்டின
த்தில் கிழக்குமேற்குதெற்குமூன்றுதெருவிலும் எ
ண்ணாயிரம்குடும்பஸ்தர்களாய் வாழ்ந்து, சிதம்பரத்
தில் ஈசானசிவாசாரியரிடத்தில் பஞ்சாக்ஷரஉபதே
சம்பெற்று உத்தராபதீசுரதெரிசனமும் மரகதவிநா
யகபூஜையும்செய்துகொண்டு அரசனாற்கொடுக்கப்பெ
ற்றசிங்கக்கொடியும் ரத்தினமகுடதனவைசியர்களெ
ன்றபேருங்கொண்டு, முன்போலக்கல்விகேள்விபரதிக
ளிற் சிறந்தவர்களாய்ச் சிவசமயநெறிவழுவாமற் சிவா
லய மடாலயபாத்திய சிவதருமாதிகளுடன்சொர்ணக
லசமாளிகைகளில்வசித்துவந்தார்கள்.

இப்படியே துசாகூஉவருஷஞ்சென்றபின் கலி கூதுளாளவிடில் பூவந்திச்சோழராஜதுராகிருதத்தால் வந்த மானபங்கபரிகாரமாகப் புத்திரர்களையும் பொருள்களையும்உபாத்தியாயர் ஆத்மநாதசாத்திரியாரிடம் ஒப்பித்துவிட்டுமற்றெல்லாருமஓ நங்கேவிண்புகுந்தார்கள்.பின்புமூன்றுதெருவிலுமுள்ள(துஙூ உ)பிள்ளைகளும், உரியகாலங்களில் உபநயனாதிகள் செய்யப்பெற்று, உபாத்தியாயர்சம்ரக்ஷிணையில் கூவுஙவாழ்ந்து, நான்காம்வருணத்துபெண்களை விவாகஞ்செய்துகொண்டு, முன்போற்சகலமரியாதைகளுடன் சைவசீலர்களாய்வாழ்கின்றகாலத்தில், சவுந்தரபாண்டியராஜா, தனதுநாட்டுக்கு உத்தமவைசியகுடும்பங்கள்வேண்டி ராஜபூஷணசோழராஜன்அனுமதிபெற்றுக் கேட்டுக்கொண்டதற்கிணங்கிக் கலிஙதுஅாஅல் பிலவங்கவுல வைகாசிமீ உகவ சுக்கிரவாரம்அஸ்தநக்ஷத்திரசுபதினத்தில்பாண்டிநாட்டில் ஓங்காரக்குடியில்வந்திருந்து இருவகையார் அரியூர்சுந்தரபட்டணத்துக்குப் பிரிந்துபோய்விட, ஒருவகையேழுபிரிவினராகிய கிழக்குத்தெருவார் இளையாற்றக்குடியில்ஒருமித்துச்சூழ்ந்திருந்தமையால், அதுநாட்டுக்குநடுமண்டலமாயிருத்தல் பற்றி நாட்டுக்கோட்டையாரென்னும்பெயருடையர்களாய், அரசனிடத்தில் [கூ] சிவாலயசுளாமடாலய

பாத்தியாதிகள்பெற்று முன்னோர்கொள்கைப்படிசிவ சமயிகளாய்வாழ்ந்துவருகின்றார்கள்.

காவிரிப்பூம்பட்டினநதிமேல கிழக்குத்தெருவிலு ள்ள ஒருவகைஎழுபிரிவு (௯௱௨) புத்திரர்களின் வம்ச த்தவர்களாகிய இவர்கள், முன்னோர்வழக்கப்படிவிபூ திருத்திராக்ஷ பஞ்சாக்ஷர திருப்பணியாதிசிவதருமங் களை மேற்கொண்டு நடத்திவந்தவருகின்ற மகிமாவி சேடத்தால், ஐஞ்ஞூற்றிரண்டினின்றும் இப்போது (௰௨_ஆ)த்துக்குமேலாந்தொகையினராய் அபிவிருத்தி யாய்ப்பெரும்பாக்கியசாலிகளாய்வாழுகின்றார்கள்.

இச்சரித்திரம், பூங்கொன்றைவேலன்குடியிற் கல்வெட்டுலிகிதத்திலும் தளாவூரிற்செப்பேட்டுலி கிதத்திலும் விஸ்தாரமாயுள்ளது. இதனைத், தேவ கோட்டைவித்துவசிகாமணிவிர. லெ. சிந்நயச்செட் டியாரவர்கள் சுருக்கிவெளியிட்டார்கள். அது இரண் டாமுறையும் அச்சில்வெளிவந்துஎங்கும்பரம்பியிருக் கின்றது. அதிலும்சிலபாகமாத்திரம் இங்கேசுருக்கி விளக்கப்பெற்றது.

இவர்கள். முன்னோர்பேணியசன் மார்க்கத்தை பேஅநுஷ்டித்துவருகின்றபடியால், ௫ஆவருடங்களு க்குமேலாகியும் ௭௲குடும்பஸ்தர்களாய்ச் சுமார் ௩௰௫ஆத்துக்குமேலாந்தொகையினராய் ப்பலவகை

யினராயிருந்தும் ஒருவரிடத்தும் விபூதிருத்திராக்ஷ பஞ்சாக்ஷராதிசிவசமயக்கொள்கைநழுவாமல் பரம்பரைவழக்கப்படி விளங்கிவருகின்றது.

இத்தனைதொகையினருள்ளே, இத்தனைவருஷகாலமாக ஒரேஉறுதியாய்ச்சிவசமயம் நிலைபெற்றுவருவது, மிகஅருமையென்றேசொல்லலாம், இத்தனை அருமைப்பாடுள்ள இவர்களிற் சிற்சிலர், பிற்காலத்தில்இற்றைக்குநூற்றாண்டுகளுக்கு முந்தினகாலந்தொடுத்துக் கல்வியிற்சிறிதுபராமுகஞ்செய்தமையால், நமதுமரபுஇது, சமயம்இதுவென்பதைஉற்றுநோக்காராயினர். அதனால்நாமெல்லாரும்பரம்பரைச்சைவசமயிகளேஎன்னுமுண்மை இவர்கள்ஞாபகத்தில்வந்திலது. அதனால்மாமிசபோசனமின்மையேசைவமென்றும் ஒருஜாதிமாத்திரம்சைவரென்றும் எண்ணிக்கொண்டு, சைவமென்பதுசமயத்தின்பேரே யென்பதையும் சிவசம்பந்தம்சைவமென்பதையும்சிவனைவழிபடுவோர் எந்தச்சாதியாராலும் சைவரேயென்பதையும், நோக்காமல், அதனைஒருசாதிப்பெயராகக்கூறுகின்றார்கள். சிவனைவழிபடுவோர்பிராமணர்முதல்எந்தச்சாதியராயினும் அவரெல்லாருஞ்சைவரேயென்பது எல்லாமதஸ்தரும் எல்லாநூல்களுங்கூறுகின்றவோகப்பிரசித்தமே.

பெருந்தொகையினர்களாய்ப் பலவூர்களில் அவரவரிஷ்டப்படிவசிக்கின்றவர்களாயிருந்தும், முதலில் விபூதியைவைத்தேசம்பந்தஞ்செய்துகொள்ளுதலும் சிவாலயத்திருமாலைவிபூதிபிரசாதம்பெற்றேவிவாகசுபகாரியஞ்செய்தலும், சோதிடநூலார்விலக்கியகார்த்திகைதிருவாதிரைகளைச்சிவசம்பந்தநோக்கியே அக்நாளிற்சுபகாரியம்நடத்தலும் முதலியசைவசமயக்கொள்கைகள் எல்லாஇடங்களிலும்எல்லாரிடத்தும் ஒரேமாதிரியாய்நிலைபெற்றுவருகின்றன. இவையெல்லாம்முன்னோர்கள்ஆதியில் நியமித்தபன்னெடுங்காலப்பெருவழக்கமே.

இப்படியிருக்க, இம்மகுடதனவைசியரிற்சிலர், தங்களைச்சைவசித்தாந்திகளென்பதில் மனங்கூசுகின்றார்கள். அங்ஙனங்கூசுவது நூறுவருஷங்கட்குட்பட்டபிற்காலத்தில் இவர்கள்மரபில்வந்துகலந்த அகப்பிரமக்கொள்கையாற்போலும். அவர்கள் அக்கொள்கையிற்றலைப்பட்டாலும் முன்னோர்வழக்கப்படி ஒன்பதுசிவாலயபாத்தியஸ்தர்களாய்ச் சிவனையேகுலதெய்வமாகக்கொண்டு அவ்வக்கோயில்நிபந்தனைப்படி காணிக்கையாதிகள்கொடுத்துவழிபட்டுத் திருமாலைவிபூதிபிரசாதம்பெற்றே விவாகாதிசுபகாரியங்கள் நடத்திவருகின்றார்கள்.

அங்ஙனமாகவும், சைவசித்தாந்திகளென்பதில் மனங்கூசுவானேன். சைவசித்தாந்திகளென்பதைக் காட்டிலும் தங்களைவேதாந்திகளென்பதுயர்வென் னுமாசையுற்றதனாற்போலும். அவ்வுண்மை அப்பெயர்களின்எதார்த்தம்உற்றுநோக்குவாருணர்வர். அதுநிற்க. வேதாந்தமென்பதுஒருமதத்தின்பேராகாமையால் அது அவர்களையின்னமதஸ்தர்களென்றுவிளக்காது. வேதாந்தமென்பதற்குவேதத்தின்முடிவென்பதேபொருள். அம்முடிவுஉபநிடதங்களென்றுவழங்கப்பெறுகின்றது. அவ்வுபநிடதங்கள், சைவர்வைஷ்ணவர் அகம்பிரமவாதிகள்முதலியபலர்க்குச்சாதகங்களாய்ப்பலவாய் அவர்க்கெல்லாம்பொதுவாயுள்ளன. அவைகளெல்லாவற்றினும்முடிந்தமுடிபாய் இதற்குமேலொருமுடிவில்லையென்னும்நிலையில்விளங்குவது வைதிகசைவசித்தாந்தமேயாதலால், இது ஒரு அடைமொழிவேண்டாது தனியரசாய்ச்சித்தாந்தமென்றேவழங்கப்பெறுகின்றது. தமக்குச்சிறப்பாயுள்ள அப்பெயரைவேண்டாது பலர்க்குப்பொதுவாயுள்ளவேதாந்தமென்னும்நாற்பெயரைவிரும்புவது தேவருணவெனச்சிறப்புற்றுவிளங்கும்தேவாமிர்தத்தை வேண்டாது மற்றெவர்க்கும்பொதுவாயுள்ளசமுத்திரத்தை விரும்புவதுபோலாம்.

அவர்கள், நாமொருவனுக்கு அடிமையென்கின்ற சைவசித்தாந்திகளென்பதைக்காட்டிலும், நாமேபிரமமென்றுகூறும் அகம்பிரமவேதாந்த நூலையனுசரித்து வேதாந்திகளென்றுகொள்வதேசிறப்பென்றுநினைத்தார்போலும். அவ்வகம்பிர்மங்கூறும்வேதாந்தநூலோ, தேகாதிகளைப்பிர்மமென்னும்லோகாயதாதிமதங்களைச் சடமெனக் காட்டிநீக்கி மேற்செலுத்தற்காக அடுக்கநின்றசித்தாகியசீவனைப்பிர்மமென்று அம்மட்டில்விளக்குவதேயாம். இவ்வுண்மை, இதன்மேற்சர்வஞ்ஞசித்தாகியசிவனையேபிர்மமென்றும் சீவனைப்பசுவென்றும் ஆணவாதிமலங்களைப்பாசமென்றும் திரிபதார்த்தங்களினுண்மைவிளக்குஞ் சைவவேதாந்தநூல்களாகியசுவேதாச்சுவதரம்முதலிய உபநிடதங்களாலினிதுகாண்க. இவ்வுபநிடதங்களையும் பூர்வாபரவிரோதமின்றியுற்றுநோக்கினுண்மைதெளியலாம்.

உள்ளபடிபிருதிவியாதிதத்துவங்களைக்கடந்துபுருஷதத்துவம்வரைவந்துநாமேபிரமமெனக் கண்டவர்களேஅகம்பிரமவேதாந்திகளாவார். அவர்கள், கீழக்கீழ்த்தத்துவங்களைப்பற்றிநின்றநாம் அவை சடமென்பதுகண்டுவிலகிச் சித்தாகியநம்மைப்பிரமமெனக்கண்டுகொண்டோமேயென்றமகிழ்ச்சிவசப்பட்டு நின்றமையால், தமக்குமேலொருபதியுண்டென்றுநோக்கு

தற்துரியசிவஞானங்கைகூடப்பெருவிடினும், அம்மட்டிலாவதுபிரபஞ்சப்பற்றொழிந்துவந்தார்கள். அப்படி வந்தவர்களும் பசுவாகியதம்மையேபிரமமெனக்கண்டமகிழ்ச்சியால் அம்மட்டில்நின்றுவிட்டார்களாதலால்அவர்கள்ஞானம்பசுஞானமேயாம். அம்மட்டில்வந்துதமக்குமேற்பதியாகியசிவமொன்றுண்டென்றுணர்ந்துமேல்தத்துவங்களையுங்கடந்துசெல்லும் ஞானமே சிவஞானமாகும். இதனை,

"வேதசாத்திரமிருதி புராணகலை ஞானம் விளங்கசபை வைகரியாதித்திறங்கண்மேலா, நாதமுடி வானவெலாம் பாச ஞானம் நண்ணியான்மா விவைகீழ் நாடலாலே, காதலினா னம்பிரம மென்னு ஞானங் கருத்துபசு ஞானமிவ னுடலிற் கட்டுண், டோதியுணர்ந் தொன்றொன்றா வுணர்தலினாற் பசுவா மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே,, என்ற "வேதாந்தத்தெளிவாஞ்சைவசித்தாந்த" சுருதியாலினிதுகாணலாம்.

தேகாதிவாஞ்சைநீங்கித் தத்துவங்கடந்துசெல்லும்அவர்நிலையேயிப்படியானால், மற்றையோர்செயலைவிரிப்பானேன். "தன்னையுந்தனக்காதாரத்தலைவனையுங்கண்டானேல்" என்றுபடிக்கின்றசைவல்யசுருதிமுதலியவைகளைமறந்துதானேதலைவன்(பிர்மம்)என்று

கூறிக்கொண்டுபிறந்தமாபுஞ்செயலும்நோக்கிச்சைவ
சித்தாந்திகளென்றுயாவரையும்பொதுவாகக் கூறுமி
டத்து இவர்கள்மாத்திரம்மனங்கூசிநிற்பானேன்,

இனி, இப்மகுடதனவைசியரில்வேறுசிலர்விஷ்
ணுபக்திமிகுதியாலோ வேறெதனாலோ பொதுவிற்
சைவசித்தாந்திகளென்பதையேற்றுக்கொள்ளவு மன
மில்லாமல் தள்ளவுமுடியாதநிலையராகின்றார்கள். வி
ஷ்ணுமூர்த்திசிவசக்திகளிலொருவர். சிவபீடரூபமா
யுள்ளவர். சப்தகுரவரிலொருவர். சைவசித்தாந்திக
ளெல்லாராலும்அவ்விதமாகப்பூஜித்துவழிபடத்தக்க
வேதாகமசம்மதரக்ஷகர்த்தாவாதலால், அவரை அவ்
வாறு பூஜிக்கின்றவர்களெல்லாரும் சைவசித்தாந்தி
களென்பதுசாஸ்திரசம்மதம். லோகப்பிரசித்தமே. அ
ங்ஙனமாகவும், சைவவம்சத்திற்பிறந்து விபூதியாதி
சிவாலயவழிபாடுகளைமேற்கொண்டுவருகிறவர்களா
யிருந்தும் அவர்கள் தம்மைச்சைவ சித்தாந்திகளென
பதிற்பராமுகஞ் செய்வதுபொருத்தமாகுமா? பரமசி
வனுக்கொருசக்தியென்கின்ற அத்தனையனுக்கவுரி
மைவாய்ந்தசிவப்பிரிய விஷ்ணுமூர்த்தியிருக்கட்டும்,
தமக்குமேலொருதெய்வ முண்டென்றுஎத்தெய்வத்
தைவழிபடுகின்றஎம்மதத்தர்களும்சைவசமயசம்மத
த்தவர்களே யாவர். இதனை, "யாதொருதெய்வங்

கொண்டமரத்தெய்வமாகியாங்கேமரமொருபாகனுர்தா ம்வருவர்" என்னுஞ்சித்தாந்தசுருதியாற்காணலாம். ஆதலால் தெய்வமொன்றுண்டு நாம்அடிமைகளென்று கொள்ளும்மதங்களொன்றையுந்தள்ளுபடிசெய்யாது தனக்குச்சோபானமாகிய அங்கங்களாய்த்தழுவிக்கொண்டுதான் அங்கியாய்ராஜாங்கத்திலமர்ந்திருப்பதுவைதிகசைவசித்தாந்தமேயாம். இதனை,

"ராஜாங்கத்திலமர்ந்தது வைதிகசைவமழகிதந்தே" என்ற சுருதியாற்காண்க. ஏனைமதங்களெல்லாம் தம்மகிமையேகூறுவனவன்றி மற்றமதங்களைத் தழுவிக்கொள்ளாது. சைவமொன்றே ஏனைமதங்களையெல்லாம்தழுவிக்கொண்டுமேலாய்விளங்குவது. இவ்வாறுதழுவிநிற்றலைச் சிவாலயங்கள், மற்றைமததேவதைகளாகியபிரமவிஷ்ணு இலக்குமிசூரியசந்திராதிமூர்த்திகளைத் தம்மிடத்தே தழுவவைத்துக்கொள்ளுதலும், அம்மூர்த்திகள் ஆதிசைவராற்பூஜிக்கப்பெறுதலுமாகியபிரத்தியக்ஷமும்விளக்கும். ஆதலால்விஷ்ணுமூர்த்திவழிபாடுசைவசமயத்துக்குச்சிறிதும்விரோதமில்லை. இதனாலும்இச்சைவத்தின் பெருமை இனிது தெளிவாம். ஆகவேவிபூதியாதிக்குரியராய்ச் சிவனைவழிபடுவதுடன்விஷ்ணுமூர்த்தியையும் வழிபடுகின்றவர்களைச்சைவசித்தாந்திகளென்பதில்யாதுதடையுளது.

இப்படியே இந்தமருடதனவைசியமரபிலுள்ளார் இன்னுஞ்சிலர் கணேசசுப்பிரமண்யபைரவசூரியாதி மூர்த்திகளை விசுவசித்துவழிபடுகின்றார்கள். அவர்களும்சைவசித்தாந்திகளென்று வழங்கப்பெருகிறார்களே தவிர வேறில்லை.

இதனை, இம்மரபினரெல்லாரும் எழுதிக்கொள்ளும்சாஸநங்களில் ஜாதிமதங்குறிக்குமிடத்தில் செட்டி ஜாதிசிவமதமென்றே யெழுதிவருகிறவழக்கத்தானுந்தெரியலாம். இதுஎத்தனையோபன்னெடுங்காலப் பெருவழக்கமே, இதுவுமன்றி,இவர்களெல்லாருந்தங்களைச்சிவகோத்திரத்தவர்களென்று சங்கற்பஞ்செய்துகொள்வதேவழக்கமாகவருகின்றது. இதுவும்பன்னெடுங்காலப்பெருவழக்கமே. இவையெல்லாம் ஒருவருக்கொருவர்சொல்லிவந்தனவல்ல. பாரம்பரையியல் பினழுவாமல் வருகின்றனவே.

இனிக்கோத்திரந்தெரியாதவர்களே சிவகோத்திரமென்பார்களென்று சிலர்எழனஞ்செய்கின்றார்கள் அது சிவதீக்ஷாக்கிரமத்தையுற்று நோக்காதவர்களுடைய அறியாமையேயாகும். ஆசாரியர்சிஷ்யனுடைய ஆத்மாவை மந்திரபாவனையாற்கிரகித்து, வாகீசுரகும்பமூலமாகவாகீசுவரிகும்பத்திலவந்து கெர்பத்திலிருப்பதாகச் சீமந்தாதிகிரியைகளுஞ்செய்து அவ்வாகீசு

வரியிடத்திலிருந்தநுபவித்ததாகச் சாதகர்மம் சிவநாமகரணம் அன்னப்பிராசனம் சௌளம் உபநயனம் முதலியகிரியைகள் செய்துபக்குவனுக்கியுபதேசிப்பதே சிவாகமங்கூறுஞ்சிவதீக்ஷாக்கிரமமாம். ஆகலின் அது வழுவமாகாது.

இம்மகுடதனவைசியர்கள் எல்லாரும், சிவதீக்ஷையைமுக்கியமாக்கொண்டு லோகப்பிரசித்தமகோற்சவ விளக்கஞ்செய்து சிவாகமவிதிப்படி பஞ்சாக்ஷரஉபதேசம்பெற்றுவருகின்றார்களாதலால், இவர்கள்மேற்காட்டியபடி சிவகுமாரர்களாய்வருதல் நோக்கியேசிவகோத்திரத்தவர்களென்று சங்கற்பித்துக்கொள்ளும் வழக்கம் பன்னெடுங்காலமாக நிகழ்ந்துவருகின்றது. மற்றுந்தேவதாபிமானிகளானாலும் அவர்களிலொருவராவது பஞ்சாக்ஷரோபதேசம்பெறாதவர்களில்லை. ஒன்பதிலோர் சிவாலயபாத்தியஸ்தர்களாய்க்காணிக்கையாதிகொடுத்து வழிபடாதவர்களுமில்லையாதலால் இவர்கள் சைவசித்தாந்திகளேயென்பதைப்பற்றி இன்னும் விரிப்பானேன். அமைக.

இதுகாறுங்கூறியவாற்றால், நாட்டுக்கோட்டைநகரத்தாரெல்லாரும் சந்திரகுலத்தில்வந்தவர்களென்பதும், இவர்கள் பரம்பரையாகக் கலியாரம்பந்தொடுத்து ஒரேஉறுதியாய் விபூதிருத்திராக்ஷபஞ்சாக்ஷர

சிவசாதனங்களே மேற்கொண்டு வருகின்றார்களென்பதும், தங்களுக்குச்சொந்தமான இளையாற்றக்குடி முதலிய ஒன்பது சிவாலயங்களிலும் சிவாகமவிதிப்படியே நித்தியபூஜாதிகள்நடத்துகின்றார்களென்பதும் மேலும் சிவாலயாதிதிருப்பணிகள் பெருந்தொகை செலவிட்டுச் செய்துவருகின்றார்களென்பதும், சிற்சிலர்அபிமானம்பற்றி வேறுவேறு மூர்த்திவழிபாடுசெய்தாலும் அது சைவத்துக்குச்சிறிதும்விரோதமில்லையென்பதும், பஞ்சாக்ஷரோபதேசசிவாலய வழிபாடு முதலிய கட்டுப்பாடுடையாராதலால் இவர்கள்எப்போதும் சைவசித்தாந்திகளேயென்பதும், சைவமென்பதொருசாதிப்பெயரல்ல சமயத்தின்பெயரே யென்பதும், அதுசிவசம்பந்தமே யென்பதும், சித்தாந்தமென்பது மற்றைச் சமயங்களின் முடிவெல்லாம் பூர்வபக்ஷங்களாக நேதிகளைந்துவந்து முடிந்தமுடிபாகிய சைவசித்தாந்தமேயென்பதும், வேதாந்தமென்பது ஒருமதத்தின் பெயரல்லவென்பதும், அது பலமதஸ்தருக்குப் பொதுவாயுள்ள நூற்பெயரேயென்பதும், பலர்க்குப் பொதுவாகிய பெயரைத்தமக்குமாத்திரஞ் சிறப்பாய் வகித்துக்கொள்வது பொருத்தமில்லையென்பதும், அவர்களில் தத்துவங்களையுள்ளபடி விட்டு விலகிப் புருஷதத்துவம் வரைவந்தவர்ஞானமும் பசு

ஞானமேயென்பதும், சைவசமயமொன்றே மற்றெம்மதங்களையும் தழுவிக்கொண்டு ராஜாங்கத்தமர்ந்துள்ளதென்பதும், மற்றுமுண்மைகளும்நியாயப்பிரமாண மூலமாக விளக்கமாகியது.

இனி, இம்மகுட தனவைசிய சைவசித்தாந்தசிலர்களாகிய நகரத்தாரெல்லாருந் தங்களுடையகுல கோத்திர சாத்திர சமயமகிமையறியாதார் கூறும்விரோதங்களைப்பரிகரித்துத் தம்முன்னோர்காட்டிவைத்த வழக்கப்படி சிவதிருப்பணியாதி சிவதர்மபரிபாலகர்களாய்ச் சைவசித்தாந்தநெறி மேலும்மேலும் அபிவிருத்தியாகும்படி பாதுகாத்துக் களத்திரபுத்திரபந்துமித்திரசகித கனதனவாகனாதிபாக்கியசாலிகளாய்ப்பெருகிவாழ்ந்து திருவருட்பேறு பெற்றுய்யும்படி ஸ்ரீ கணேசஸ்கந்தசகித ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசுர சரணாரவிந்தங்களைப்பணிந்துபிரார்த்திக்கின்றேன்.

முற்றிற்று.

